இராசேந்திரன், திரு. நா. இளங்கோ ஆகிய பதினான்கு ஆராய்ச்சி அறிஞர்கள்—திருக்குறளில் பற்பல ஆய்வுகளைச் செய்து புகழ்பெற்ற திருக்குறள் அறிஞர்கள்-தம் ஆய்வுரை களை அரங்கேற்றினார்கள்.

வெவ்வேறு தலைப்புகள், வெவ்வேறு போக்குகள்; தலைப்புகளிலும் நோக்குகளிலும் போக்குகளிலும் எத் தனை வேறுபாடுகள் இருப்பினும் அத்தனை ஆய்வுகளி லும் வேரோடி விளங்கியவை – தலைமை ஊற்றாகவும் உணர்வாகவும் ஊடுருவி நின்றவை – திருக்குறள் ஆய்வுக் கான திட்டங்களே. ஆய்வுகள் அனைத்தும் நுட்பமும் திட்ப மும் செறிந்தவை; எதிர்கால ஆய்விற்குப் புதிய வித்தாக அமைந்தவை.

ஒவ்வோர் ஆய்வுரையையும் அடுத்து வினாக்கள் தொடுக்கப்பட்டன; விடைகள் விடுக்கப்பட்டன; விளக் கங்கள் கொடுக்கப்பட்டன.

திருவள்ளுவரின் காலம் பற்றிய வினாக்களும் விடைகளும் விளக்கங்களும் திருவள்ளுவரின் சமயம் தொடர்பான சிந்தனைகளும், ஒரு சில குறள்களுக்கு ஆராய்ச்சி அறிஞர்கள் தந்த புதிய விளக்கங்களும், காமத்துப்பால் தொடர்பான சிந்தனைகளும், திராவிட ஆரிய பண்பாட்டுப் பரிமாற்றம் தொடர்பான சிந்தனைகளும் அறிஞர்கள் கருத்தைப் பெரிதும் கவர்ந்தன.

மூன்று நாள் அமர்வுகளிலும் ‘சிந்தனைச் செம்மல்’ பேராசிரியர் ந. சஞ்சீவி அவர்கள் கலந்துரையாடல்களில் பெரும்பங்கு பெற்று எழுச்சியும் ஏற்றமும் சிந்தனைத் தெளிவும் மிக்க பல்வேறு கருத்துகளை வந்தோர் உள்ளம் மகிழ வாரி வழங்கினார்கள். பேராசிரியர் அவர்கள் கலந் துரையாடலின் போது,

> அந்தணர், விருந்து முதலிய பல சொற்களுக்குத் திரு வள்ளுவர் புதிய பொருள்கள் – புதியநோக்குகளில் புதிய விளக்கங்கள் – தந்திருப்பது திருவள்ளுவர் செய்த நுண் புரட்சி

என்பதைத் திராவிட ஆரியப் பண்பாடுகளின் அடிப் படையில் மிகத் தெளிவாக விளக்கினார்கள்.

இவ்வாய்வரங்கில் அறிஞர்கள் வழங்கிய ஆய்வுரைகள் திருக்குறளில் இதுவரையில் நடந்த ஆய்வுகள் அனைத்தை யும், அனைத்துத் துறைகளையும் முழுமையாக தழுவியவை எனக் கொள்ள முடியாது; என்றாலும், தொட்டக் கூறுகள்/ துறைகள் துலங்கின; ஆழமாய் அகலமாய் விளங்கின; கேட்டார்க்கு மன நிறைவை வழங்கின.

கல்லூரிப் பேராசிரியர்கள் பலரும் பன்மொழிப் புலவர் திரு. கா. அப்பாத்துரை முதலிய திருக்குறள் ஆய்வறிஞர்கள் சிலரும் சிறப்பு விருந்தினர்களாக ஆய்வரங்கில் பங்கு பெற்று, ஆய்வரங்கு ஆய்வரங்காகத் திகழ மேலும் மெருகூட்டினர்.

திருக்குறள் ஆய்வு மதிப்பீட்டின் நிறைவு விழா 26-8-83 அன்று பிற்பகல் 4-30 மணிக்கு நடைபெற்றது. நிறைவு விழாவில் கல்லூரிக் கல்வி இயக்குநர், அறிவியல் தமிழறிஞர் பேராசிரியர் டாக்டர் பொன். திருஞான சம்பந்தம் அவர்கள் நிறைவுரையை நிகழ்த்தினார்கள். சென்னைப் பல்கலைக் கழகப் பதிவாளர் திரு. சி. கே. குமாரசாமி அவர்கள் பாராட் டுரை வழங்கி ஆய்வரங்கில் ஆய்வுரை வழங்கியவர்களைச் சிறப்பித்தார்கள்.

இறுதியில், தமிழ் இலக்கியத் துறை இணைப்பேரா சிரியர் டாக்டர் பொன். கோதண்டராமன் அவர்கள் நன்றி கூற ஆய்வரங்கு நிறைவு பெற்றது.

மூன்று நாள்களுக்கு நடைபெற்ற இக்கருத்தரங்கால் ஏற்பட்ட பயன்கள் பலப்பல.

திருக்குறளில் இதுவரை எந்தெந்தக் கோணங்களிலும் கோலங்களிலும் ஆய்வுகள் நடைபெற்றுள்ளன என்பது ஓரளவு தெளிவாக்கப்பட்டு, இனி எந்தெந்த நோக்குகளிலும் போக்குகளிலும் ஆய்வுகளை மேற்கொள்ளலாம் என்பது ஓரளவு வரையறுக்கப்பட்டது.

அன்று இன்று என்றில்லாமல் என்றைக்குமே சமுதாய முன்னேற்றத்திற்கு வழிகாட்டும் வள்ளுவத்தில், சமுதாயத் திற்குப் பயன்படும் நோக்கில் ஆய்வுகள் வளரவில்லை என் பதும் உலகப் பொதுமறையாகிய திருக்குறள் தனக்குரிய உண்மையான மதிப்பினைப் பெறும் அளவிற்கு அது

பரப்பப்படவில்லை என்பதும் அதற்கான முயற்சிகளைத் தமிழுலகம் சரியாக மேற்கொள்ளவில்லை என்பதும் இவ் வாய்வரங்கில் மிகத் தெளிவாக உணர முடிந்தது.

இத்தகைய மதிப்பீட்டுக் கருத்தரங்குகள் மேலும் செம்மைபெற வேண்டுமானால்—பெரும் பயன் தருவன வாக அமைய வேண்டுமானால்-பதிப்புகள், ஆய்வு நூல்கள், கட்டுரைகள் முதலிய அனைத்தையும் உள்ளடக்கிய விரி வான ஒரு விளக்க நிலை ஆய்வடங்கல் (Annotated Bibliography) தேவையென வரவேற்புரையில் பேராசிரியர் டாக்டர் ந.சஞ்சீவி அவர்கள் கூறியது எத்துணையளவிற்கு உண்மையானது என்பதை உணர முடிந்தது.

மொத்தத்தில் இவ்வாய்வு மதிப்பீட்டுக் கருத்தரங்கு உண்மையும் ஊட்டமும் மிக்கதாக, ஏற்றமும் எழுச்சியும் மிக்கதாக அமைந்து திருக்குறள் ஆய்வுக்குப் புது வழி காட்டிப் புத்தொளி ஊட்டியது என்பது உறுதி.

*[சென்னை வானொலி, அலைவரிசை 1-இல், 15—9—1983 அன்று, 'இலக்கிய மேடை' என்னும் பகுதியில் ஆற்றிய உரை]*

# பொருளகராதி

### தீ



### து



### தெ



### தே



### தொ